29th October 1958]

*Irrigation wells for the benefit of Harijans*

* 697 Q.—SRI P. G. MANICKAM: கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா ?—

சென்னை ராஜ்யத்திலிருக்கும் ஹரிஜன விவசாயிகளுக்குப் பாசனக் கிணறுகள் தோண்டுவதற்காக 1958–59-ஆம் ஆண்டில் மானியமாக ஒதுக்கப்பட்ட தொகையிலிருந்து ஒவ்வொரு ஜில்லாவிற்கும் பகிர்ந்தளிக்கப்பட்டிருக்கும் தொகை எவ்வளவு ?

THE HON. SRI P. KAKKAN: A statement[a] is placed on the table of the House.

SRI P. G. MANICKAM: ஸார், ரெவின்யூ இலாகாவால் கொடுக்கப்படும் இந்தத் தொகை ஹரிஜனங்களுக்குப் பூராவாகப் போய்ச் சேருகிறதா அல்லது கிணறுகள் சரியான முறையில் வெட்டப்படுகிறதா என்பதை ஹரிஜனங்களுடைய நன்மைக்காக நியமிக்கப்பட்டுள்ள ஹரிஜன இலாகா அதிகாரிகள் பார்வையிடுகிறார்களா ? அதைப்பற்றி அரசாங்கத்திற்கு ரிப்போர்ட் அனுப்புகிறார்களா ?

THE HON. SRI P. KAKKAN: அப்படியெல்லாம் ஹரிஜன நல அதிகாரிகள் பார்த்து கலெக்டர் நன்கு அங்கீகாரம் கொடுத்த பிறகு தான் கிணறுகள் வெட்டப்படும் என்று சொல்லிக்கொள்ள ஆசைப் படுகிறேன்.

SRI K. PERIANNAN: ஐயா, 1958–59-ம் வருஷத்திய மானியம் கொடுக்கப்பட்டு விட்டதா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI P. KAKKAN: ரூபாய் 4,20,000 ஒதுக்கப்பட்டிருக்கிறது. இப்போது கொடுத்துக்கொண்டிருக்கிறோம்.

SRI M. JAGANNATHAN: கிணறு வெட்ட ஒவ்வொரு நபருக்கும் ரூபாய் 1,500 கொடுப்பதாகத் தெரிகிறது. ஆனால் இந்த மானியம் மொத்தமாகக் கொடுக்கப்படுவதில்லை. மூன்று தவணைகளில் கொடுத் துக்கொண்டிருக்கிறார்கள். ஒரே தவணையில் ரூ. 1,500 ஐயும் கொடுக்க சர்க்கார் முன் வருவார்களா ?

THE HON. SRI P. KAKKAN: உண்மையாக, விவசாயி நல்ல முறையில் வெட்டவேண்டுமென்பதற்காகத்தான் இப்போது தவணைகளில் கொடுக்கப்படுகிறது. ஒரேயடியாகக் கொடுத்தால் கிணறு வெட்டாமலேயே வேறுவிதத்தில் இந்தப் பணம் செலவழிந்து போய்விடக்கூடும்.

SRI S. NAGARAJA MONIGAR: இந்தக் கேள்வியின்மீது ஒரு உப கேள்வி கேட்ட அங்கத்தினர் ஹரிஜனங்களுக்கு நேராகப் போய்ச் சேருகிறதா என்று கேட்டார்கள். அப்படியானால் அவர்களுக்குச் சேராமல் இடையிலே எங்கே போய் விடுகிறது, என்ன ஆகிறது என்று விவரித்துச் சொல்வார்களா ?

MR. SPEAKER: யாரைக் கேட்கிறீர்கள் ? இந்தக் கேள்வியைக் கேட்ட அங்கத்தினர் சொல்ல முடியாது.

*Bill Collectors of Coimbatore Municipality*

* 698 Q.—SRI N. MARUDACHALAM: Will the Hon. the Minister for Local Administration be pleased to state—

(a) whether the resolution of the Coimbatore Municipality No. 209, dated 10th May 1958, recommending increase in the salaries of Bill Collectors employed by the Municipality has been received by the Government; and

(b) if so, what action was taken thereon?

---

[a] Printed as Appendix VII on page 95 infra.